உத்தரவு இட்டிருக்கிறார்களா ? அப்படி யாராவது அதில் சேர்ந்திருக்கிறார்களா ? அல்லது அந்தந்த ஆலயங்களில் இருக்கக்கூடிய வாத்தியக்காரர்கள் மட்டும்தான் இதில் எடுத்துக்கொள்ளப்படுகிறார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஏற்கெனவே ஆலயங்களில் சேவை செய்கிறவர்களுக்கு தகுந்த பயிற்சி அளிக்கவேண்டுமென்ற நோக்கத்துடன்தான் இப்படி ஆலயங்களில் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். ஆகவே ஆலயங்களில் யாரை அனுப்புகிறார்களோ அவர்களுக்குத்தான் பயிற்சி அளிக்கப்படும்.

SRI S. NAGARAJA MONIGAR : இப்படிப்பட்ட ரிபரஷர் கோர்ஸ் என்பது வாத்தியங்களை வாசிப்பதற்கு மாத்திரம் அளிக்கப்படுகிறதா அல்லது தவுல் முதலியவைகளையும் இதில் சேர்த்துக்கொள்ளப்படுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தவுல் வாசிப்பது சுலபம். அதனால்தான் நாதஸ்வரத்திற்குமட்டும் பயிற்சி கொடுக்கப்படுகிறது.

*Presidents of panchayat boards*

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் இடத்தில் இல்லாததால் கேள்வியும் பதிலும் சட்டசபை நடவடிக்கைகளில் அச்சடிக்கப்படும்.

* 373 *Q*.—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

பஞ்சாயத்து போர்டு தலைவர்கள் பஞ்சாயத்து போர்டு பணத்தை கையாடாமலிருக்க அவர்களிடமிருந்து பணமாகவோ சொத்தாகவோ செக்யூரிட்டி பெறுவதற்காக விதிகள் போட அரசாங்கத்திற்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : No. Sir.

*'Have-nots'*

* 374 *Q*.—SRI S. M. ANNAMALAI (on behalf of Sri T. Veluchami) : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) what is the approximate percentage of the people in our State who have no agricultural lands or houses or other properties (i.e., the have-nots);

(*b*) among them, what is the percentage of those who have no other go but to depend on cooly labour ; and

(*c*) the scope that exists for them in the Block Development Schemes for work and improvement of their lot?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) Information is not readily available.

(*c*) Under the Community Development Programme provision has been made for contribution in labour by those who cannot contribute in money or materials and thereby secure the benefits of the Community Development Programme.

SRI A. A. RASHEED : Have the Government any information about the number of 'haves' in our State?